


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை




உலகப் புகழ்பெற்ற டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் காலமானுர் என்ற செய்திகேட்டு வருந்தாதார் யாருமிலர். பாரதநாட்டின் மாபெரும் விஞ்ஞானியாகிய டாக்டர் கிருஷ்ணன் தமிழ்த் தாயின் தவப்புதல்வர். புதிய பாரதத்தின் விஞ்ஞான–கலை மறுமலர்ச்சிக்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டிருந்த பெரியார் தமது பண்பாலும், இயல்பாலும் ஒரு தெய்விகக் குழந்தையைப் போல் திகழ்ந்தவர். அவருடைய வாழ்வும், நினைவும் இந்த மண்ணில் வளம் சேர்ப்பதாகும்.

## அமரர் கிருஷ்ணன்

கரியமாணிக்கம் திரு. ஸ்ரீநிவாஸ கிருஷ்ணன் என்ற உலகப் புகழ்ப்பெற்ற இந்திய விஞ்ஞானி டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் 4—12—1898-ல் பிறந்தார். பண்பு நலம் சான்ற கிராமச் சூழலில் வத்திராயிருப்பிலும் திருவில்லிபுத்தூரிலும் ஆரம்பக் கல்வி பெற்றுப் பின்னர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, சென்னை கிறித்தவக் கல்லூரி ஆகியவற்றில் படித்துப் பட்டம் பெற்ருர்.

1923 முதல் 5 ஆண்டுகள் இந்திய விஞ்ஞான அபிவிருத்திச் சங்கத்தின் ஆராய்ச்சி மாணவராக இருந்தார். பின்னர், டாக்கா பல்கலைக் கழகத்திலும், வேறு பல நிறுவனங்களிலும் சிறப்புறப் பணியாற்றி, இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு புதுடில்லி தேசீய பௌதிக ஆய்வுக் கூடத்தின் இயக்குநராகப்பொறுப் பேற்ருர். அதன்பின் அவர் ஏற்றுச் சிறப்பித்த பொறுப்புக்கள் ஏராளம்.

டாக்டர் கிருஷ்ணன் சிறந்த பேச்சாளர்-எழுத்தாளர்-கலைவல்லார்-சிந்தனையாளர்-செயல் திறமுடையவர். அவர் பழகுதற்கு எளியர்-பண்பாளர்-அன்பாளர்.

சாதாரண அறிவு படைத்தவர்களும் புரிந்து கொள்ளுமாறு நவீன அறிவியல் உண்மைகளை–நுணுக்கங்களை எளிதில் விளக்கும் ஆற்றல் வாய்ந்தவர். முன்பொருமுறை மத்திய அமைச்சர் டாக்டர் ஹுமாயூன் கபீர் கூறியுள்ளது போல, ‘நிறை குடம் தளும்பாது’ என்பதற்கு டாக்டர் கிருஷ்ணனே சான்று எனலாம். அந்த அடக்கப் பண்பு, அவரை அமரராக்கி விட்டது.



18-6-1961

# THE KARUR VYSYA BANK LIMITED, KARUR.

## Balance Sheet as on 31 st DECEMBER 1960.

| Corresponding Figures as on 31—12—59 Rs. nP. | CAPITAL AND LIABILITIES | Amount Rs. nP. | TOTAL Rs. nP. |
|---|---|---|---|
| | 1. CAPITAL: | | |
| | Authorised Capital: 40,000 Equity (ordinary) Shares of Rs. 25/- each | 10,00,000-00 | |
| 5,00,000-00 | Issued, Subscribed and paidup Capital: 30,000 Equity (ordinary) Shares of Rs. 25/- each paidup | | 7,50,000-00 |
| 5,90,510-87 | 2. RESERVE FUND AND OTHER RESERVES: | | 8,75,510-87 |
| | Includes Rs. 3,14,125 being amount standing to the credit of share premium account | | |
| | 3. DEPOSITS AND OTHER ACCOUNTS: | | |
| 2,64,59,638-39 | Fixed Deposits | 2,90,37,106-54 | |
| 17,42,779-28 | Savings Bank Deposits | 22,47,265-07 | |
| 77,20,171-63 | Current Accounts, Contingency Accounts etc. | 67,30,188-64 | 3,80,14,560-25 |
| 3,69,515-76 | 4. BORROWINGS FROM OTHER BANKING COMPANIES, AGENTS Etc. | | 7,69,883-93 |
| | (i) In India Rs. 7,69,883 93 | | |
| | (ii) Outside India Nil | | |
| | PARTICULARS: | | |
| | (i) Secured by lodging G. P. Notes Face value Rs. 18,68,700 00 | | |
| | Fixed Deposit Rs. 25,000 00 | | |
| | (ii) Unsecured Nil | | |
| 2,22,484-53 | 5. BILLS PAYABLE: | | 2,41,505-47 |
| 7,57,721-76 | 6. BILLS FOR COLLECTION BEING BILLS RECEIVABLE (AS PER CONTRA): | | 11,89,596-76 |
| | (i) Payable in India Rs. 11,89,596 76 | | |
| | (ii) Payable outside India Nil | | |
| | 7. OTHER LIABILITIES: | | |
| 6,212-19 | Unpaid Dividends | 7,079-36 | |
| 7,22,977-94 | Interest on Deposits Accrued | 7,51,698-55 | |
| 18,568-78 | Charity Fund | 20,214-81 | |
| 13,931-05 | Provident Fund | 41,915-81 | |
| 4,440-54 | Sundries | 5,369-36 | |
| 11,081-79 | Branch Adjustments | 98,239-80 | |
| 14,476-93 | Interest received in advance for Loans | 10,319-05 | |
| | Provision for Investments Reserve Rs. 1,00,000 00 | | |
| 1,16,746-45 | " Bad debts " Rs. 15,936 45 | 1,15,936-45 | |
| | Incometax Reserve | 2,587-20 | 10,53,360-39 |
| Nil | 8. ACCEPTANCES, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS. (PER CONTRA) | | Nil |

| Corresponding Figures as on 31—12—59 Rs. nP. | PROPERTY AND ASSETS | Amount Rs. nP. | TOTAL Rs. nP. |
|---|---|---|---|
| 33,52,579-91 | 1. CASH: In hand and with Reserve Bank, their Agents and State Bank of India (including Foreign currency notes-Nil) | | 42,34,698-92 |
| | 2. BALANCES WITH OTHER BANKS (IN INDIA): | | |
| 6,10,171-61 | In current accounts | 6,67,458-98 | |
| 25,35,500-00 | In fixed deposits | 1,35,500-00 | 8,02,958-98 |
| | (outside India): Nil | Nil | |
| 10,00,000-00 | 3. MONEY AT CALL AND SHORT NOTICE: | | Nil |
| 85,54,209-68 | 4. INVESTMENTS AT COST: | | 84,21,200-68 |
| | (i) Securities of the Central and State Governments and other Trustee Securities, including Treasury Bills of the Central and State Governments (Face Value) Rs. 72,67,000 00 | | |
| | (ii) Shares Nil | | |
| | (iii) Debentures or Bonds (Face Value) Rs. 2,00,000 00 | | |
| | (iv) Other Investments ,, 10,00,000 00 | | |
| | (v) Gold Nil | | |
| | The Market value of the above securities as on 31-12-60 is Rs. 83,56,758 15 | | |
| 2,17,28,859-39 | 5. ADVANCES: | | 2,74,72,748-94 |
| | (a) Other than bad and doubtful debts for which provision has been made to the satisfaction of the Auditors | | |
| | (i) Loans, Cash, credits, Overdrafts etc. (in India) | 2,65,40,319-55 | |
| | ... ... ... (outside India) | Nil | |
| | (ii) Bills discounted and purchased (excluding Treasury Bills of the Central and State Governments): | | |
| | (1) Payable in India | 9,32,429-39 | |
| | (2) Payable outside India | Nil | |
| 7,57,721-76 | 6. BILLS RECEIVABLE BEING BILLS FOR COLLECTION (AS PER CONTRA) | | 11,89,596-76 |
| | (i) Payable in India Rs. 11,89,596 76 | | |
| | (ii) Payable outside India Nil | | |
| Nil | 7. CONSTITUENTS LIABILITIES FOR ACCEPTANCE, ENDORSEMENTS AND OTHER OBLIGATIONS (PER CONTRA) | | Nil |
| | 8. PREMISES: | | |
| | Buildings at cost as per Last Balance Sheet | 1,14,758-56 | |
| | Add: Additions during the year | 1,27,232-00 | |
| | | 2,41,990-56 | |
| | Less: Sales during the year | 36-56 | |
| | | 2,41,954-00 | |
| 94,299-60 | Less: Depreciation to date | 22,816-04 | 2,19,137-96 |
| | 9. FURNITURES AND FIXTURES: | | |
| | At cost as per Last Balance Sheet | 1,96,468-91 | |
| | Add: Additions during the year | 40,188-67 | |
| | | 2,36,657-58 | |
| 1,46,745-72 | Less: Depreciation to date | 58,528-19 | 1,78,129-39 |
| | 10. OTHER ASSETS INCLUDING SILVER: | | |
| 30,000-00 | Books and forms on hand | 38,688-09 | |
| 4,25,106-79 | Interest Receivable on Loans | 5,19,859-88 | |
| 1,62,196-82 | Interest Receivable on Investments | 1,50,477-68 | |
| 2,20,118-83 | Advance payment of Income-tax and taxes deducted at source | 2,09,228-59 | |
| 34,402-65 | Rent and other advances | 40,054-72 | |
| 339-25 | Court expenses Recoverable | — | |
| | Motor Car Rs. 22,354 50 | | |
| 10,789-20 | Less: Depreciation to date Rs. 13,723 14 | 8,631-36 | 9,66,940-32 |
| | 11. NON-BANKING ASSETS ACQUIRED IN SATISFACTION OF CLAIMS | | Nil |
| 3,96,63,041-2[illegible] | TOTAL Rs. | | 4,34,5[illegible] 411-95 |

கரூர் வைஸ்யா பாங்கு லிட்,
கரூர்.
(ESTD. 1916)

நிர்வாக சபையார் ரிபோர்ட்.

1961-ம் வருஷம் மார்ச்சு மாதம் 29-ந் தேதி புதன் கிழமை காலை 10 மணிக்கு ஹெட் ஆபீஸில் கூடும் வருஷாந்திர மகா சபையார் அவர்களுக்கு, நிர்வாக சபையார் கொடுக்கும் ரிப்போர்ட். இத்துடன் அனுப்பியிருக்கும் 31-12-1960-ம் தேதியோடு முடிவான சென்ற வருஷத்திய பாலன்ஸ்ஷீட் அண்டு லாப நஷ்டக் கணக்குப்படி பாங்கியிலிருந்து கொடுக்கப்பட்டதும், கொடுக்கப்படவேண்டியதுமான வட்டி, வாடகை வகையரு சகல செலவுகளும் போகநிகர் லாபம் ரூ. 5,60,939-46 ந பை. கிடைத்திருக்கிறது. இத்துடன் சென்ற வயதில் லாபத்தில் எடுத்து வைத்தது ரூ. 27916--32-ம், போனவில் மிகுதி ரூ. 2138-50-ம் சேர்ந்து மொத்தம் ரூ 5,90,994-28 ஆகின்றது.

சென்ற வயதில் ஹெட் ஆபீஸிலும் பிராஞ்சுகளிலும் வரவு செலவுகள் திருப்திகரமாக நடைபெற்றன. இவ்வயதிலும் அதே மாதிரி நடைபெற்று வருகின்றன. சென்ற மகாசபைக்குப்பின் சிதம்பரத்திலும், விருத்தாசலத்திலும், கிளைகள் திறக்கப்பட்டு செவ்வனே நடந்து வருகின்றன. கூடிய சீக்கிரத்தில் கோயமுத்தூர் ஜெ

சர்வோதயம்

# கிராமக் கைத்தொழில்கள்

'கிராம கைத்தொழில்' பற்றிய காந்தியடிகளின் கருத்து நமது கிராமங்களிலுள்ள கோடிக்கணக்கான மக்களுக்கு எவ்வாறு ஓய்வு கிடைக்கும்படி செய்வது என்பதல்ல இப்போது நம்முன் உள்ள பிரச்னை. ஆண்டில் ஆறுமாதம் சும்மா இருக்கிறார்கள். அந்த ஓய்வுக் காலத்தை எப்படிப் பயன்படுத்துவது என்பதே பிரச்னை.

கிராமவாசிகளுக்கு வேலை கிடைக்குமாறு செய்வதற்கு உரிய வழி இது வரை நாம் செய்து வந்த கைத்தொழில்களை மீண்டும் புனருத்தாரணம் செய்வதுதான்.

கிராம வாசிகள் தங்கள் குடிசைகளில் சாமான்களை உற்பத்தி செய்தாலும், அவைகளை ஒன்றாகச் சேர்த்து, இலாபங்களைப் பகிர்ந்து கொள்ளலாம். திட்டமிட்ட அடிப்படையிலும், மேற்பார்வையிலும் வேலை செய்யலாம். பொது இருப்பிலிருந்து மூலப்பொருள்களை அளிக்கலாம். கூட்டுறவு முயற்சி மனப்பான்மை மட்டும் ஏற்பட்டு விட்டால், கூட்டுறவிற்கும் வேலைகளைப் பிரிவினைசெய்து கொள்வதற்கும் நேரத்தை மீதப்படுத்துவதற்கும், வேலையில் திறமை காண்பதற்கும்நிச்சயமாகப் போதுமான வாய்ப்பு இருக்கிறது.

நமது அன்றாடத் தேவைகள் எல்லாம் கிராமங்களிலிருந்தே கிடைக்கவேண்டும். அவ்வாறு சில பொருள்கள் கிடைக்காவிட்டால் சிறிது சிரமம் எடுத்து, கூட்டாக முயற்சி செய்து, அவைகளை கிராம மக்கள் லாபகரமான முறையில் அளிக்க முடியுமா என்பதை ஆராய வேண்டும். இதுதான் கிராமக் கைத்தொழில் திட்டத்தின் கருத்து.

கிராமவாசிகளுக்கு, நாம் படுபாதகமான தீங்கு செய்து விட்டோம். அதற்குப் பிரயாசித்தம் செய்ய ஒரே வழி, அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்கு உடனடியாக மார்க்கெட் கிடைக்கும் என்ற உறுதியளித்து அவர்கள் இழந்துவிட்ட கைத்தொழில்களை மீண்டும் புனருத்தாரணம் செய்ய உற்சாகம் அளிப்பதுதான். நாம் கிராமங்களுக்குச் செய்யவேண்டிய கடமையை அலட்சியம் செய்தோமானால், நமது அழிவை நாமே தேடிக்கொண்டவர்களாவோம்.

## சர்வோதயம் என்றால் என்ன?

சென்னை அரசினர் மாளிகையில் நடைபெற்ற சர்வோதய சங்கப் பொதுக் கூட்டத்தில் அமைச்சர் திரு. பக்தவத்சலம் பேசுகையில் 'சர்வோதயம்' என்பதென்ன என்று விளக்கிப் பேசுகையில் கூறியதாவது :

நம் நாட்டு மக்களில் பெரும்பாலோர் கிராமத்திலிருக்கிறார்கள். ஆகவே, நாம் கிராமங்களில்தான் அதிக அக்கறை காட்டவேண்டும்.

சர்வோதயம் என்றால் எல்லோரும் வாழ வேண்டும் என்பது தான் பொருள். ஒரு சிலர் மட்டும் வசதியுடன் வாழ்ந்தால் போதாது. இதைகாந்தியடிகள்வற்புறுத்தியதால்தான் உலகம் இன்றும் அவரைப் பாராட்டுகிறது.

அயல் நாட்டு மக்கள் எவ்வளவு உயர்வாக வாழ்க்கை நடத்தினாலும், அவர்களுக்கு வாழ்க்கையில் இன்பமில்லை—அமைதியில்லை. இதைத்தான் சர்வோதய வழி வற்புறுத்துகிறது. கிராம அடிப்படையிலிருந்தே இது ஆரம்பிக்கப்படவேண்டுமென்றுதான், பஞ்சாயத்தும், பஞ்சாயத்து யூனியனும் ஆரம்பிக்கப்பட வேண்டியிருக்கிறது.

## தமிழரின் அவதி தீர

நாட்டில் தீண்டாமை நிலவுவதற்கும், ஏராளமான தமிழர்கள் பிழைப்புத் தேடி வெளிநாடுகளுக்குச் சென்று அங்குக் கூலிகளாக அவதிப் படுவதற்கும் நில உடைமைதான் காரணம் என்றும், எனவே தனியார் உடைமை ஒழிந்து நிலம் சமூக உடைமையானால்தான் பிரச்னை தீருமென்றும் அண்மையில் பாப்பா நாட்டில் நடைபெற்ற தமிழ் நாடு சர்வோதய சம்மேளனத்திற்குத் தலைமை வகித்துப் பேசிய திரு. ச. ஜெகநாதன் குறிப்பிட்டார்.



## தமிழ்நாட்டில் கல்விச் சலுகை

இவ்வாண்டு முதல் தமிழ் நாட்டிலுள்ள ஏழைப்பிள்ளைகள் ஆண்டொன்றுக்கு 1200 ரூபாக்கு மேல் வருமானம் இல்லாதவர்களின் குழந்தைகள் 11-வது வகுப்புவரை சம்பளம் கட்ட வேண்டியதில்லை. மருத்துவப் பரிசோதனை, லைப்ரரி முதலிய விசேஷக் கட்டணமும் இவர்கள் கட்டவேண்டியதில்லை. ஒருமாணவன் ஒரு வகுப்பில் தவறிவிட்டாலும் இச்சலுகையுண்டு. ஆனால் இரண்டாம் ஆண்டும் அதே வகுப்பில் அவன் தவறினால் அவன் தேறிய பின்னரே சலுகையளிக்கப்படும். இச்சலுகையில் தனியார் பள்ளிக்கு ஏற்படுகிற நஷ்டத்தையும் அரசாங்கம் ஈடு செய்யும்.



# அனைத்திந்திய வானொலியின் கால் நூற்றாண்டு வளர்ச்சி

1947-ல் இந்தியா சுதந்திரமடைந்தபோது டில்லி, பம்பாய், கல்கத்தா, சென்னை, லக்னோ, திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் மாத்திரமே வானொலி நிலையங்கள் இருந்தன.

இப்போது 28 ரேடியோ நிலையங்கள் உள்ளன; 35 பிரதான ஸ்டுடியோக்களும், 4 துணை ஸ்டுடியோக்களும், உள்ளன. மொத்தம் 60 ஒலிபரப்பி சாதனங்கள் இயங்கிவருகின்றன. இவை தவிர கல்வி ஒலிபரப்பு நிகழ்ச்சிகளுக்காக 'டெலிவிஷன்' நிலையமொன்றும் புதுடில்லியில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

மேலும் 57 ஒலிபரப்பு சாதனங்கள் நிறுவ ஏற்பாடாகி வருகிறது. இவை அனைத்தும் நிறுவப்படும்போது, இந்நாட்டின் மொத்த நிலப்பரப்பில் 61 சதவிகிதம் பிரதேசத்தில், நாட்டு மக்களில் ஏறத்தாழ 74 சதவிகிதத்தினர் வானொலி நிகழ்ச்சிகளைக் கேட்பதற்கு வசதி ஏற்படும்.

சென்ற ஆண்டில் உள்நாட்டு ஒலிபரப்புக்களில் மொத்தம் 1லட்சத்து 15 ஆயிரம் மணி நேரத்துக்குப் பல்வேறு வகையான நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்பட்டன. வெளிநாடுகளுக்கான நிகழ்ச்சிகள் சுமார் 7 ஆயிரம் மணி நேரத்திற்கு ஒலிபரப்பப்பட்டன.

இந்த நாட்டில் 14 பிராந்திய மொழிகளிலும் நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்படுகின்றன. பல்வேறு நிலையங்களிலிருந்தும் ஒலிபரப்பப்படுகிற கிராம நிகழ்ச்சிகளிலே மொத்தம் 51 கிளை மொழிகளும், பழங்குடி மக்கள் உபயோகிக்கும் 82 மொழிகளும் கையாளப்படுகின்றன.

மொழிவாரியாக ஒவ்வொரு பிராந்தியத்திலும் குறைந்தபட்சம் ஒரு நிலையமாவது இயங்கிவருகிறது. சில பிராந்தியங்களில் ஒன்றுக்கும் அதிகமான நிலையங்களும் உள்ளன. அந்தந்தப் பிராந்தியத்தின் கலை, இலக்கியம், கலாசார மரபுகளுக்கேற்ப நிகழ்ச்சிகள் தயாரிக்கப்படுகின்றன.

அனைத்திந்திய வானொலியின் செய்திப் பிரிவு நாள்தோறும் மொத்தம் 29 இந்திய, அந்நிய மொழிகளில் ஐந்து நிமிஷங்களிலிருந்து 15 நிமிஷம் வரையுள்ள 97 செய்தி அறிக்கைகளை ஒலிபரப்புகின்றன.

மாதர்களுக்கும், குழந்தைகளுக்கும், பள்ளி மாணவர்களுக்கும், பல்கலைக் கழக மாணவர்களுக்கும், தொழில்துறைத் தொழிலாளர்களுக்கும் தனித்தனியே நிகழ்ச்சிகள் தயாரிக்கப்பட்டு ஒலிபரப்பப்படுகின்றன.

இந்த நாட்டின் கலாச்சாரச் சிறப்பை ஏனைய நாடுகளுக்கு எடுத்துரைப்பதற்காகவும், உலக விவகாரங்களிலே இந்தியாவின் கருத்தைத் தெரிவிப்பதற்காகவும் நாள்தோறும் 16 மொழிகளில் 23 மணி நேரத்திற்குப் பலவகை நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகி வருகின்றன.

இசை நிகழ்ச்சிகளையும், உரை நிகழ்ச்சிகளையும் ஒலிப்பதிவு செய்து நிரந்தரமாகப் பத்திரப்படுத்தி வைப்பதற்காக ஒரு தனிப் பிரிவு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. காந்தியடிகள், தாகூர், படேல், சரோஜினி நாயுடு ஆகியோரின் ஒலிப்பதிவுகளுடன் சங்கீத மேதைகள் சிலரின் இசை நிகழ்ச்சிப் பதிவுகளும் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன.

★

பாப்பாப்பாட்டு:

## உனது நண்பன்

காலையிளம் பரிதிவான் உதிக்கும் நேரம்
காரிருளும் நமைவிட்டு விலகும் நேரம்
மாலைமுழு மதிமேற்கே மலரும் நேரம்
மற்றுமுள நேரமெலாம் கூறும்கடி காரம்

பொன்னென்று காலத்தைப் போற்றி நின்று
புகழ்மிக்க நல்வாழ்வு பெறுவாய் தம்பி
என்றுதினம் தவறாமல் உனக்கு ணர்த்தும்
இணையற்ற கடிகாரம் உனது நண்பன்!

—ந. செல்லப்பன்

### ரவீந்திரர் நூற்றாண்டு விழா
கல்கத்தா
பாரதி தமிழ்ச் சங்கத்தில்

ஜூன் 4-ந்தேதி சங்கத் தலைவர் திருமதி. வெங்கடலக்ஷ்மி தலைமையில் ரவீந்திரநாதர் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. அனைத்திந்திய செய்தித்தாள் ஆசிரியர் பெரு மன்றத்தின் தலைவரான திரு. சப்ளாகாந்த பட்டாசாரியா எம். பி. சிறப்பு விருந்தினராக வந்திருந்து விழாவினைச்சிறப்பித்தார்.

செல்வி யோகாம்பாளின் 'ரவீந்திர சங்கீத இசையும், திருவாளர்கள் அருணசாமி, டி. எஸ். ரத்னம், விஷ்ணுபட்டாசாரியார் ஆகியோரின் சிறப்புரைக்குப்பின் செயலாளர் திரு. என். குப்புசாமி நன்றி கூறினர்.

★

காங்கிரஸ்

## சாதனைகளை விளக்க இளைஞர் படை



அண்மையில் அகில இந்திய அடிப்படையில் விஜயவாடாவில் காங்கிரஸ் இளைஞர்கள் கூடினர்கள். காங்கிரஸ் கட்சியின் திட்டம், இலட்சியம், இளைஞர்களின் பங்கு ஆகியன குறித்து நீண்ட நேரம் விவாதித்த பிறகு இந்திய தேசிய காங்கிரஸின் இலட்சியங்கள், கொள்கைகள், வேலைத்திட்டங்களை மக்களுக்கு விளக்கிச் சொல்ல நாடு முழுவதிலும் பரவலாக ஓர் இயக்கம் ஆரம்பிக்க இளைஞர் காங்கிரஸ் தேசிய கவுன்சில் தீர்மானித்திருக்கிறது. இளைஞர் காங்கிரஸ் தினமான ஆகஸ்டு 9-ந்தேதி அந்த இயக்கம் ஆரம்பித்து வைக்கப்படும்.

வருகிற பொதுத் தேர்தலில் காங்கிரசுக்குத் துணைபுரிய ஒரு லட்சம் இளைஞர்களைத் திரட்டவும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. மேலே குறிப்பிட்ட இயக்கத்தை மேற்கொள்வதற்கு காங்கிரசின் சாதனைகளைப் பற்றியபுள்ளி விவரங்கள் இளைஞர் காங்கிரஸ் ஊழியர்களுக்குத் திரட்டித் தரப்படும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நாட்டிலே ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களையும், மூன்றுவது திட்டத்தின் இலட்சியக் குறிகளையும் பொது மக்களுக்கு அவர்கள் எடுத்துரைப்பார்கள்.

நாட்டின் எதிர்காலச் சிற்பிகளான இளைஞர்கள் நிறைவேற்றிய இந்தத் தீர்மானம் காங்கிரசுக்கு நல்ல வலிவும் வனப்பும் தேடித் தரும் என்பதில் ஐயமில்லை.

### காங்கிரஸ் டிக்கட் பெற மனுச்செய்வோர்

வரும் பொதுத் தேர்தலுக்கு காங்கிரஸ் கட்சிச் சார்பில் போட்டியிட விரும்புகிறவர்கள் ஜுலை 31-ந் தேதிக்குள் தங்கள் அபேட்சை மனுவை அனுப்பிவைத்து விடவேண்டும்.

தமிழ் நாடு சட்ட சபைக்கும் டில்லிச் சட்டசபைக்கும் அடுத்த ஆண்டுத் துவக்கத்தில் பொதுத் தேர்தல் நடைபெற இருக்கிறது. காங்கிரஸ் கட்சிச் சார்பில் யார் யாரை நிறுத்துவது என்பது பற்றி ஆலோசிப்பதற்காக 11-ந் தேதி காலை சென்னை தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் சார்பில் திரு. ஓ. வி. அளகேசன் தலைமையில் தேர்தல் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. முதல் அமைச்சர் காமராஜர், திரு. பக்த வத்சலம், திரு. கக்கன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தனி அழைப்பின் பேரில் டில்லி மந்திரி லால்பகதூர் சாஸ்திரியும் அ. இ. கா. க. பிரதிநிதியாக ஜெயினும் வந்திருந்தனர். போட்டியிட விரும்புகிறவர்கள் மனுவுடன் 200 ரூபாய் அனுப்ப வேண்டும்.

தமிழ்நாடு சட்ட சபைக்குப் போட்டியிட விரும்புகிறவர்கள் ரூ. 500-ம், டில்லிச் சட்டசபைக்குப் போட்டியிட விரும்புகிறவர்கள் ரூ. 1250-ம் ஜாமீன் கட்ட வேண்டும்.

அபேட்சை மனுக்களைத் தேர்ந்தெடுக்கத் தமிழ்நாடு முழுவதிலும் மாவட்டப் பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டனர். அதன்படி திருச்சி மாவட்டத்திற்கு ஜனாப் எஸ். என் ஏ. அஜீஸ், திரு. பி. கே. நல்லுசாமி ஆகிய இருவரும் நியமிக்கப்பட்டனர்.






ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஏடு 26 | 18—6—1961 | வாரம் 32

# கல்விச் சலுகை

ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1200க்கு மேற்படாத ஏழைப் பெற்றோர்களின் குழந்தைகளுக்கு இவ்வாண்டு முதலே 11-வது வகுப்பு வரை இலவசக் கல்வி அளிப்பதற்கான ஓர் உத்தரவைத் தமிழ் நாட்டு அரசாங்கம் பிறப்பித்திருக்கிறது என்பதை இலட்சக்கணக்கான ஏழைப் பெற்றோர்கள் மகிழ்ந்து பாராட்டுவார்கள். இன்னும், இந்த ஏழைக் குழந்தைகள் மருத்துவப் பரிசோதனை, நூல் நிலையக் கட்டணம் முதலிய விசேஷக் கட்டணங்களும் கட்டவேண்டியதில்லை. இந்தச் சலுகைகளைப் பெறுகிறவர்கள் ஓராண்டில் ஒரு வகுப்பில் தவறிவிட்டாலும் அடுத்த ஆண்டும் சலுகைகளைப் பெறலாம். மீண்டும் தவறினால் சலுகை நிறுத்தப்பட்டு, அம்மாணவன் தேர்வு பெற்றதும் மறுபடியும் சலுகை தொடரும். இந்தக் கல்விச் சலுகையால் தனியார் பள்ளிகளுக்கு ஏற்படுகிற நஷ்டத்தையும் அரசாங்கம் ஈடு செய்யும். இதுவரை எந்த ஆட்சியும், எந்த மாநிலமும் இத்தகைய சலுகைகளை வழங்கியதில்லை. இப்போது மதிப்பிற்குரிய காமராஜ் அமைச்சரவை வழங்கியுள்ள இந்தச் சலுகை தமிழ் நாட்டிலுள்ள ஏழைப் பெற்றோர்களுக்கு நல்லதொரு வரப்பிரசாதமாகும்.

# அமெரிக்க உதவி

அடுத்தாற்போல், அனைத்திந்தியாவின் ஒருமுகமான பாராட்டைப் பெற்ற 'மதிய உணவுத் திட்டம்'. இங்கு வந்த வெளிநாட்டினர் பலரும் இத்திட்டத்தை வியந்து பாராட்டுகிறார்கள். இத்திட்டம் படிப்படியே வளர்ந்து, இப்போது தமிழ் நாட்டில், மூன்றாவது திட்டத்தில் 17 லட்சம் சிறுவர்களுக்கு மதிய உணவு கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம் என்றாகியிருக்கிறது. இந்நிலையில், இத்திட்டத்திற்கு ஆதரவாக அமெரிக்காவில் உள்ள 'கேர்' என்ற கூட்டுறவு நிறுவனம் மூன்று கோடி ரூபாய் மதிப்புள்ள தானியங்களும், பால்பொடியும் உதவ முன்வந்திருக்கிறது. இதனால், இவ்வாண்டிலிருந்தே திட்டப்படி 17 லட்சம் மாணவர்களுக்கு மதிய உணவு வழங்கும் வாய்ப்பு ஏற்பட்டிருப்பதோடு அவ்வுணவுடன் பாலோ தயிரோ வழங்குவதற்கான வாய்ப்பும் ஏற்பட்டிருக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரியதாகும். இத்தகையதொரு நல்லுதவியைச் செய்ய முன்வந்த 'கேர்' நிறுவனத்தை மனமாரப் பாராட்டுகிறோம். ❋

# உலகப் பயணம்

இலங்கைக்குப் போனேன்; இலங்கைப் பிரதமர் திருமதி பண்டார நாயகாவின் மாளிகைக்குப் போனேன். நான் போனதும் ஒரு பிளேட்டில் இரண்டு மாம்பழங்களை நறுக்கி வைத்துச்சாப்பிடுங்கள் என்றார்.

'மாம்பழம் மிகச் சுவையாக இருக்கிறது!' என்று கூறிவிட்டு தட்டைக் காலிசெய்யப் போகும் நேரத்தில் இலங்கை கவர்னர் ஜெனரல் ஆலிவர் குணதிலகா ஒரு சிறிய காகிதப் பையோடு உள்ளே நுழைந்தார். கவர்னர் ஜெனரலுக்கு வணக்கம் தெரிவித்தேன்—அவரும், 'ஓகோ! சஞ்சாரியா! வாருங்கள் வாருங்கள். எப்போ வந்தீர்கள்?' என்று புன்னகை ததும்பக் கேட்டார். அந்தப் புன்னகைக்குப் பொருள் என்ன என்பது பின்னர் தான் தெரியும். ஆனால், அவர் வந்ததும் வராததுமாக, 'இதோ சாப்பிடுங்கள்' என்று கூறி என்னிடம் 2 மாம்பழங்களையும், திருமதி பண்டார நாயகாவிடம் 2 மாம்பழங்களையும் நீட்டினார்.

'ரொம்ப நன்றி'. இப்போது தான் சாப்பிட்டேன். உங்கள் பிரதம மந்திரி கொடுத்தார்' என்று கூறிவிட்டு, 'ஏது உங்கள் ஊரில் ஏதாவது மாம்பழத் திருவிழாவா?' என்று கேட்டேன் 'அப்படி ஒன்றுமில்லை, உங்கள் பிரதமர் நேருஜி, எங்கள் பிரதமருக்கு ஒரு மாம்பழக் கூடையும் எனக்கு ஒரு மாம்பழக் கூடையும் அனுப்பியிருப்பார்' என்றார்.

'அது வந்து சேர்ந்ததற்கு என் மூலமாக ரசீது அனுப்புகிறீகள் போலிருக்கிறது' என்றேன் சிரித்துக்கொண்டே.

'அதெல்லாமில்லை. தாங்கள் விருந்தினராயிற்றே' என்றார் அவரும் சிரித்தபடியே.

ரஷ்யாவை நீங்கள் ஆதரிப்பதால்தான் எங்கள் காம்ரேடுகள் உங்களை ஆதரிப்பதாக ஒரு வதந்தி பலமாக அடிபடுகிறது' என்றேன்.

'ஐயோ! பழி ஓரிடம்; பாவம் ஓரிடம் என்பது போல உங்கள் நாட்டு கம்யூனிஸ்டுகள் எங்களை ஆதரிப்பதாக இத்தகைய பழியா எங்களுக்கு வந்து சேரவேண்டும்?' என்றார்.

என்னவோ, எங்கள் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் ஆரம்பப் பள்ளிப் பிள்ளைகளுக்கு ஒன்று சொல்லிக் கொடுப்பார்கள். அது தான். 'நல்லிணக்கம் இல்லாரோடு இணங்கவேண்டாம்' என்பது. இவ்வாறு கூறிவிட்டு, சரி, அது உங்கள் இஷ்டம். குறுக்கே நாங்கள் நிற்கவில்லை. வருகிறேன்' என்று கூறிவிட்டு அங்கிருந்து சீனாவுக்குப் புறப்பட்டேன்.

சீனாவில் சென்று இறங்கியதும் எனக்கு நமது இந்திய—அதிலும் தமிழ் நாட்டுச் 'காம்ரேடு' களின் நினைவுதான் வந்தது. பாவம் அவர்கள் விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே. மாஸ்கோவில் உள்ளவர்களுக்குத் தலைவலித்தால் இங்கே உள்ளவர்கள் 'தைலம்' தடவிக் கொள்வார்களே அப்படிப்பட்டவர்கள். சீனாவில் பஞ்சம், அந்தப் பஞ்ச நிலைமை கம்யூனிஸ்ட் ஆட்சி நீடிப்பதற்கு ஒரு சோதனைக் கட்டமாகத்தான் இருக்கிறது என்றால் எவ்வளவு தூரம் அழுது துடிப்பார்கள்?

சீனாவில் ஏற்பட்டிருக்கிற நெருக்கடி இவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ நான் அறியேன். அங்கு கோதுமை விளைச்சல் தொடர்ந்து மூன்று வருஷமாக ஏமாற்றமாக முடிந்திருக்கிறது. எனவே 62-ம் வருஷம் முழுவதும் வெளி நாடுகளிலிருந்து கோதுமை இறக்குமதி செய்ய வேண்டியதுதான் என்பதோடு இறக்குமதியை ஆதரிக்கும்படியாகவும் நேரிடலாமாம். 'சீனாவுக்கு அருள்வாய்! ('பகைவனுக் கருள்வாய்' என்பது போல) என்று பாடிக் கொண்டே அங்கிருந்து புறப்பட்டேன்.

—சஞ்சாரி



# செய்திக் கோவை

## திருச்சி எழுத்தாளர் சங்கம்

திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் குழந்தை இலக்கியப் பிரிவு ஆரம்ப விழா ஜூன் 11-ந் தேதி ராஜேந்திரா தனிப் பயிற்சிக் கல்லூரி மாடியில் பொதுச் செயலாளர் திரு. ஐ. சண்முகநாதன் தலைமையில் நடைபெற்றது. திரு. ரெட்டியார் குழந்தை இலக்கியப் பிரிவைத் துவக்கி வைத்து இப்பிரிவின் அவசியத்தையும் சிறப்பியல்புகளையும் விளக்கினார். நமது ஆசிரியர் திரு. திருலோக சீதாராம் 'குழந்தை இலக்கியம்' சிறந்தோங்குவதற்கான வழி வகைகளை எடுத்துச் சொன்னார். பால் மார்ட்டின் சார்ல்உட் என்னும் ஐரோப்பிய இளைஞர் சிறப்பு விருந்தினராக வந்திருந்து விழாவில் பேசினார். பேராசிரியர் கமலபதி எழுத்தாளர்களுக்கு அவரை அறிமுகப்படுத்தி வைத்துப் பேசினார். திருவாளர்கள் என். ராகவன், அமலன், ஜோதி சஞ்சீவி, வீர. மெய்யப்பன், க. செல்லப்பன், வேணி, அடைக்கலம், சாவித்திரி அம்மாள் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். தொடக்கத்தில் குழந்தை இலக்கியப் பிரிவின் அமைப்பாளர் திருச்சி பாரதன் அனைவரையும் வரவேற்றார். கூட்டுச் செயலர் ரா. நீலமேகம் நன்றி கூற விழா முடிவுற்றது.



## திருச்சி-சென்னை பகல்நேர எக்ஸ்பிரஸ்

திருச்சிக்கும் திண்டிவனத்திற்கும் இடையே தற்போது செல்லும் 133, 134 எண்களுடைய பாசஞ்சர் ரயில் வண்டிகள் சென்னை வரையில் ஓடுமென்றும், அவை பகல் நேரத்தில் சென்னைக்கும் திருச்சிக்கும் இடையே எக்ஸ்பிரஸ் வண்டிகளாக விடப்படும் என்றும் அடுத்த கால அட்டவணைத் திருத்தத்தின் போது இது அமலாகும் என்றும் சொல்லப்படுகிறது.



## மருதையாற்றில் புதிய பாலம்

அரியலூர் மருதையாற்றுப் பழைய பாலத்திற்கு 400 அடி தள்ளி ஒரு புதிய ரயில் பாலம் கட்டப்பட்டு, ஜூன் 12-ந் தேதி அந்தப் புதிய பாலத்தை தியாகி திரு. டி. எஸ். அருணசலம் தலைமையில் அமைச்சர் திரு. கக்கன் திறந்து வைத்தார்.

7 லட்சத்து 60 ஆயிரம் ரூ. செலவில் கட்டப்பட்டுள்ள இந்தப் பாலத்தில் 60 அடி அகலம் உள்ள 9 கண்கள் உள்ளன. பெரிய ராட்சத லாரிகளையும், ராணுவ டாங்கிகளையும் தாங்கிக் கொள்ளும் அபாரசக்தி உள்ளதாக இந்தப் பாலம் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.



## புதுக்கோட்டை திருக்குறட் கழகம்

புதுக்கோட்டை திருக்குறள் கழகத்தின் இம்மாதத்திய இலக்கியச் சொற்பொழிவு ஜூன் 11-ந் தேதிமாலை புதுக்கோட்டை நகர்மன்றத்தில் நடைபெற்றது. மதுரை தியாகராசர் கல்லூரிப் பேராசிரிய சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை 'பழம் புதுமை' என்னும் தலைப்பில் அருமையான ஒரு சொற்பொழிவு நிழ்த்தினார்.

'பேராசிரியர் பேசுகையில் நம் முன்னோர் சிந்தனையில் வானஊர்தி கண்டார்கள்—இலக்கியத்தில் எழுதியதோடு அவர்கள் சிந்தனை நின்றுவிட்டது—மேனாட்டார் சிந்தித்துச் செயல்பட்டனர்—வெற்றி பெற்றனர்' என்றும் '2400 ஆண்டுகளுக்கு முன்பே மேனாடுகளுக்கு மயிற்பீலி ஏற்றுமதியான வரலாறு குறளால் தெரிகிறது என்றும் இவையாவும் 'பழம் புதுமைகள்' என்றும் குறிப்பிட்டார். புலவர் திரு. நடராசன் நன்றி கூறினார்.



## விசாக விழா

திருச்சி மண்டையூர் சோலை ஸ்ரீ பாலதண்டாயுதபாணி ஆலய விசாக விழா சென்ற வாரம் இராஜகிரி சுவாமிகள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. யோகாசன ஆசிரியர் க. தங்காம் பிள்ளை யோகாசனப் பயிற்சிகள் சிலவற்றைப் பாராட்டத்தக்க வகையில் செய்து காட்டினார். தலைவர், சோதி சஞ்சீவியாரின் சேவையைப் பாராட்டி அவருக்கு மகாசோதி என்ற பட்டம் வழங்கினார். டிரஸ்டி திரு. து. சாம்பசிவம் ஆலயத்தின் நிர்வாக முறையை விளக்கினார். செயலாளர் நன்றி கூறினார்.



## தெய்விக சக்தி நிபுணர்

தென்னாட்டு க்ஷேத்ர பிரயாணத்தில், கரூர் வந்திருக்கும் பண்டித பாஸ்கர ஜோஸ்யர் ஜூன் 8-ம் தேதி கரூர் பஜனை சமாஜத்தின் ஆதரவில் தெய்விக சக்தி மூலம் வெற்றிலையில் மை தடவி தீப ஒளியில் ஸ்ரீ ஆஞ்சநேய பகவானைக் காண்பித்ததாகவும், இவர் பகவான் ஹனுமத் மந்திரங்களை ஸ்தோத்தரித்தவுடன் 10 வயதுக்கு மேல் 15 வயதுக்குள்உள்ள சிறுவர்கள் பார்க்கும்போது எந்த பாஷையில் கேள்விகள் கேட்டாலும் அந்த பாஷையில் பதில்கள் வருவதாகவும், பிரபல ஜோதிஷ வம்சத்தில் வந்த இவர் தேசத்தில் நடந்த பல சந்தர்ப்பங்களைப் பத்திரிக்கைகளின் மூலம் முன்னதாகவே சரியாக வெளியிட்டு இருக்கிறார் என்றும் இவர் பாஸ்கர பஞ்சாங்கம், பல ஜோதிஷ ஏகை சாஸ்திர கிரந்தங்களை வெளியிட்டு வருகிறார் என்றும், தற்சமயம் 'ஸ்ரீ நிலயம்', 18, ராஜாஜி தெருவில் தங்கியிருக்கிறார் என்றும் அன்பர் ஒருவர் அறிவிக்கிறார்.

## திருச்சி டி. மு. கோர்ட்
S. C. No. 351/1961

K. திருஞானம் பிள்ளை—வாதி
குப்புசாமி—பிரதிவாதி

வாதிக்குப் பிரதிவாதியால் கிடைக்க வேண்டிய தொகை ரூ. 105-8-0-க்கு வாதி தாவா செய்து 21-6-61-ல் வாய்தாப் போடப்பட்டிருக்கிறது. அன்று பிரதிவாதி ஷை கோர்ட்டில் 11 மணிக்கு ஆஜராகி ஆக்ஷேபனைகளைத் தெரிவித்துக் கொள்ளலாம்.

K. சீனிவாசன்,
3/4308/90 அட்வகேட்




## சிபாரிசு

'இவ்வளவு குறைந்த மார்க் உள்ள பையனை அழைத்துக்கொண்டு வந்தீர்களே?' என்ருர் கல்லூரி முதல்வர்.

"அதிக மார்க் இருந்தால் நான் ஏன் வருகிறேன்? குறைவை நிறைவு செய்வதற்குத்தானே சிபார்சு!" என்றேன்.

'இல்லை, இல்லை — நிறைவை நிலை நாட்டுவதற்கும் சிபார்சு தேவைதான்'' என்ருர் முதல்வர். நான் திகைத்துப் போனேன்.

இருக்கிற இடங்களில் 50 இடங்களைத் தனக்காக ஒதுக்கி வைக்குமாறு கல்லூரி ஆட்சிக்குழுச் செயலர் தனக்குத் தாக்கீது அனுப்பியிருப்பதை ரகசியமென்று காட்டினர் முதல்வர். முதல்வருக்கு இரக்கங் காட்டிவிட்டு ஆட்சிக்குழுச் செயலரிடம் போனேன். அந்த 50 இடங்களுக்கு 72 பெரிய மனிதர்களின் சிபார்சுகள், தாக்கீதுகள் வந்திருப்பதைக் காட்டினர் அவர். கடைசியில் பையனிடமும் அவனை அழைத்து வந்த தகப்பனரிடமும் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு வேறு பெரிய இடம் பார்த்துப் பிடிக்கும்படி சொன்னேன். "பெரிய மனிதர்கள் யாரும் ஊரில் இல்லை'' என்ருர் அவர்.

"அவர்கள் இன்னும் பெரிய மனிதர்களைத்தேடிக் கொண்டு போயிருப்பார்கள்'' என்றேன் நான்.

"அதென்ன அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?'' என்று வியப்புடன் கேட்டார்.

"ஆமாம். நான் உங்கள் பையனுக்காக இரண்டு நாட்களாய்க் கல்லூரிகளுக்குக் காவடி எடுத்த நேரத்தில் என்னைத் தேடிக் கொண்டு 20 பேர் இங்கே வந்து விட்டுப் போயிருக்கிருர்கள். இப்படித்தான்— நீங்கள் தேடிப் போனபோதும் அவர்கள் வேறு இடங்களில் அலைந்துகொண்டிருந்திருக்கலாம்'' என்றேன்.

''பையனை விவசாயத்திற்கே விட்டு விடுகிறேன்'' என்று முடிவு சொல்லி விட்டுப்போனர் நண்பர். ஆனல் பையனை எப்படியோ ஒரு கல்லூரியில் சேர்த்து விட்டதாக மூன்றும் நாள் முக மலர்ச்சியுடன் வந்து நின்ருர். அவருடைய சாமர்த்தியமே சாமர்த்தியம்!



பள்ளிக்கூடத்தில் மாணவனுக்கு இடம் பிடிப்பதைப் போல சாகஸமான காரியம் இந்தக் காலத்தில்வேறென்றுமில்லை. அறிவு குறைந்தவர்களுக்கு அறிவு கற்பிக்க வேண்டியிருக்க, அதிக மார்க் வாங்கிய பையனைத்தான் சேர்த்துக் கொள்வோம் என்று அடம்பிடிப்பவர்கள் கல்விச்சாலை நடத்தவில்லை— கல்விக் கடை அதுவும் கள்ளச்சந்தை நடத்துகிறவர்கள் என்றுதான் சொல்லவேண்டும்.



ஊரில் நமக்குச் செல்வாக்கு இருக்கிறது என்று கருதிக் கொள்பவர்கள் உண்மையில் அப்படி எதுவும் இல்லை என்பதைப் பிறர் அறிந்து கொள்ளாமல் இருக்கும் பொருட்டு இந்தச் சீசனுக்குத் தலைமறைவாகப் போய் இருந்து விட்டுத் திரும்புவது நல்ல உபாயமாகும். இல்லாவிட்டால் மாணவரும் பெற்ருேரும் புடைசூழ, கல்விச் சாலைச் சுவர்களில் முட்டிக்கொண்டு, செல்வாக்கும் அந்தஸ்தும் இழந்து திரும்புவது தவிர வேறு வழிகிடையாது. இந்த சீசனில்தான் 'பெரியோர் எல்லாம் பெரியோர் அல்லர். –பள்ளி முதல்வரே பலவாகுவார்'' என்றெல்லாம் உண்மைகள் புலனுகின்றன. வடக்கே கல்கத்தாபோன்ற இடங்களில் இஞ்சினீயரிங், மருத்துவம் போன்ற படிப்புக்குப் பல்லாயிர ரூபாய்கள் நன்கொடை என்ற பெயரால் கைக்கூலி கொட்டி அழுதால்தான் இடம் கிடைக்கும் என்பது நம்மவருக்குத் தெரிந்தால், தமிழ் நாட்டு நிலைமையே தேவலை என்று ஆறுதல் பிறக்கும். இங்கே அவ்வளவு மோசமான நிலைமை யொன்றும் கிடையாது. செல்வாக்கு, பணம் மார்க் எல்லாவற்றையும் விட விதியின் மேல் பாரத்தைப் போட்டுவிட்டுச் சலியாமல் முயற்சி பண்ணுகிறவர்களுக்கு அவரவர் தலையில் எழுதியது போல் நடக்கும் என்ற அளவிலாவது நிலைமை இருந்து வருகிறது. லஞ்சப் பேச்சு நல்ல வேளையாக இங்கே அடிபடக் காணேம். அது வரை நாம் கொடுத்து வைத்தவர்கள் தாம்.

இந்த வருஷம் இஞ்சினீயரிங் முடித்தவர்களில் பலருக்கு இன்னமும் நியமனம் கிடைக்கவில்லை. இதற்கு முன்பு பரீட்சை எழுதுவதற்கு முன்பே நியமன உத்திரவு பள்ளிக்கூடத்துக்கே வந்துவிடுமாம். இந்த வருஷம் மட்டும் ஏன் இவ்வளவு தாமதம் என்று விசாரிக்கப் போனல், 'இந்த வருஷம் சற்று தாமதித்தாவது நியமனம் கிடைக்கும். அடுத்து வருகின்ற ஆண்டுகளில் இஞ்சினீயர்களும் எஞ்சிக் கிடப்பார்கள் என்று விஷயம் தெரிந்த வட்டாரத்தில் தகவல் கிடைக்கிறது. பாலிடெக்னிக் பாஸ் செய்தவர்கள் பாடு இன்னும் மோசம்.

படகில் எல்லோரும் ஒரு பக்கமாகச் சேர்ந்தால் என்ன ஆகும்? எல்லோரும் இஞ்சினீயரிங் படிக்க விரும்பி, ஊருக்கு ஊர் இஞ்சினீயரிங் கல்லூரிகளும் அதிகமானல் பிறகு மலிந்து போகிறது. முன்பு கல்லூரிப் பட்டதாரிகளுக்கு ஒரு காலத்தில் பெரிய கிராக்கியிருந்து பின்னர் பிழைப்புக்குத் திண்டாடும் பட்டதாரிகள் எண்ணிக்கை ஏறவில்லையா?



படிப்புக்கும் பள்ளிக்கூடத்துக்கும் மகத்துவம் ஏற்படுவது நல்லதற்கு அடையாளம். ஆனல் அதற்குக் கிராக்கி ஏற்பட்டு, செல்வாக்கும் அதிகாரமும் இல்லாதவர்களுக்கு அங்கே இடமில்லை என்ற நிலை எங்கோ புரையோடிக் கொண்டிருக்கிறது என்பதற்கு அடையாளம். மாணவர்களின் இளமையும் பெற்ருேர்களின் செல்வமும், தேசத்தின் பொது சக்தியும் விரையமாகிக் கொண்டிருக்கிறதோ என்றுதான் தோன்றுகிறது. படிப்பு வேண்டும், இந்த மாதிரிப் படிப்பா என்பதை மேலோர் சிந்திக்க வேண்டும்.

◆ ◆ ◆

# தமிழகத் தொழில்வளம்

சேலத்தை அடுத்த மேட்டூரில் இத்தாலியக் கம்பெனியின் உதவியுடன் அமைக்கப்பட இருக்கும் அலுமினியத் தொழிற்சாலைக்கு இம்மாதம் 10-ந் தேதி மத்திய அமைச்சர் லால்பகதூர் சாஸ்திரி அடிப்படைக்கல் நாட்டினார். முதலமைச்சர் காமராஜ் தலைமை வகித்தார். தமிழகத் தொழில் வளத்திற்கு திரு. காமராஜர் சலியாமல் உழைப்பதைப் பாராட்டிவிட்டு திரு. லால் பகதூர் சாஸ்திரி பேசுகையில் "இந்தியா ஆண்டு தோறும் 10 ஆயிரம் டன் அலுமினியம் உற்பத்தி செய்தால் அன்னியச் செலாவணியில் ரூ. 2 கோடி மிச்சம் கிடைக்கும்" என்று குறிப்பிட்டார்.

முதலமைச்சர் பேசுகையில், குறிப்பிட்டதாவது: "தமிழ் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாக இருக்கிறது. இதை ஒழிக்க வேண்டும். மேட்டூர் அலுமினியத் தொழிற்சாலை ஏற்படுவதின் மூலம் பல துணைத்தொழில்கள் ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. அதன் மூலம் பலருக்கு வேலை கிடைக்கும்.

"சேலம் மாவட்டத்தில் கனிப்பொருள்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இவைகளைத் தோண்டி எடுத்துப் பல புதிய தொழில்களை ஆரம்பிக்க வேண்டும்."

அடுத்து அமைச்சர் திரு. வெங்கட்ராமன் பேசுகையில், கடந்த 4 ஆண்டுகளில் இது போன்ற தொழிற்சாலைகளில் தமிழ் நாடு அரசாங்கம் நாலரைக் கோடி ரூபாய்க்குப் பங்குகள் வாங்கியிருக்கிறது என்றார்.

மேலும் பேசுகையில் அவர் கூறியதாவது: "தனிப்பட்ட தொழில் அதிபர்கள் தொழிற்சாலைகள் ஆரம்பிக்க வேண்டும். உள் நாட்டில் கிடைக்கும் மூலப் பொருள்களைக் கொண்டு புதிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்கத் தொழில் அதிபர்கள் முன் வந்தால் அவர்கட்கு அரசாங்கம் உதவி செய்யும்".

இறுதியாக இத்தொழிற்சாலையின் முக்கியஸ்தரான கோவை தொழிலதிபர் திரு. வேங்கடசாமி நாயுடு பேசுகையில், "இத்தொழிற்சாலை ஆண்டுதோறும் 10 ஆயிரம் டன் உற்பத்தி செய்யும்; அதை 20 ஆயிரம் டன்னாக உயர்த்த முயற்சி செய்யப்படும்" என்றார்.

*

## திருச்சியில் மாபெரும் தொழிற்சாலை

செக்கோஸ்லோவகியா உதவியுடன் இந்தியாவில் கனரக மின்சாரக்கருவித் தொழிற்சாலை ஒன்றும் அதிக அழுத்தமுள்ள பாயிலர் தொழிற்சாலை ஒன்றும் நிறுவுவதற்கான விரிவான திட்ட அறிக்கைகள் தயாரிப்பதற்கான உடன்படிக்கையில் இருநாடுகளும் கையெழுத்துச் செய்துள்ளன.

இந்தக் கனரக மின்சார பாய்லர் உற்பத்திச்சாலையைத் திருச்சியில் நிறுவ செக் நாட்டு நிபுணர்கள் முடிவு செய்திருப்பதாக நம்பத்தகுந்த வட்டாரங்களிலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. தவிர உபகருவிகள் உற்பத்திச்சாலை ஒன்றும் இங்கு நிறுவப்படும். இரண்டு தொழிற்சாலைகளுக்குமாக 35 லிருந்து 37 கோடி ரூபாய் வரை ஆகலாம்.

*

## செயற்கை வைரப்பட்டை தீர்க்க

திருச்சிக்கு அருகிலுள்ள குளத்தூரில் செயற்கை வைரப் பட்டை தீர்க்கும் தொழிலாளர்களுக்காக கூட்டுறவு முறையில் ஒரு பெரிய தொழிற்சாலை அமைக்கத் தமிழ் நாடு அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. இம்மாதிரி 4 தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டு 20 ஆயிரம் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கப்படும்.

★

## திருச்சி டி. மு. கோர்ட்
## O. S. No. 111/58

லா. தா. வாளாடி வீரமலை மூப்பன் சம்சாரம் அலமேலு அம்மாள்—வாதி

லா. தா. இனும் சமயபுரம் நந்தி மூப்பன் சம்சாரம் அய்யானம்மை அம்மாள்—3ம் பிரதிவாதி

வாதி தெரிவிப்பது என்னவென்றால் :

வாதியால் தாவாச் சொத்துக்களைப்பிரித்து தனக்கு ஒரு பாகம் கிடைக்க வேண்டுமென்று தாவா செய்து ஷெ தாவா 22-6-61உ விசாரணைக்குப் போட்டிருப்பதை அறியவும்.

R. கோபாலரத்தினம்
2/4307/89 வக்கீல்.

# படித்தோம் - சொல்கிறோம்

## நெய்வேலி தரிசனம் கண்டேன்

[ஆசிரியர் : கருப்பையா பி. ஏ., 20 பக்கம், விலை குறிக்கப்படவில்லை.]

சுதந்திர இந்தியாவில் தொழில் வளம்பெற நமது அரசாங்கம் தீவிர ஏற்பாடுகளைச் செய்துவருகின்றனர். தொழில் பெருகிக் கோடிக் கணக்கானவர்களுக்குத் தொழில்வாய்ப்புக் கிடைத்திருப்பதோடு இந்நாட்டுப் பொருளாதாரத் துறையிலும் நாம் முன்னேறித்தான் இருக்கிறோம்.

சேலம் மாவட்டத்தில் நிறுவப்பெற இருக்கும் இரும்புத் தொழிற்சாலை தமிழகத் தொழில் வளத்திற்குப் பேருதவி புரிவதாகும். சேலத்தில் இரும்பு கிடைக்கிறது, அங்கு இரும்பு உருக்காலை நிறுவுவதென்றால் நிலக்கரி வேண்டுமே. அத்தேவையைப் பூர்த்தி செய்வதற்கு நமக்கு வரப்பிரசாதமாக அமைந்தது நெய்வேலி. கருப்பு வைரச் சுரங்கமான நெய்வேலி தென்னாற்காடு மாவட்டத்தில் கூடலூர் வட்டத்தில் கூடலூர்—விருத்தாசலம் ரயில்பாதையில் இருக்கிறது.

நெய்வேலியில் நிலக்கரி இருக்கிறது என்பதைக் கண்டுபிடிப்பதற்குள் ஏற்பட்ட சோதனைகளும், சிரமங்களும் கொஞ்சநஞ்சமல்ல. அவற்றையெல்லாம் சமாளித்து, இப்போது நெய்வேலி நிலக்கரியை ஆதாரமாகக்கொண்டு சேலம் மாவட்டத்தில் ஓர் இரும்பு உருக்கு ஆலை நிறுவுவதற்கு மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 25 கோடி நிதி ஒதுக்கப்பட்டுவிட்டது; ஆண்டு ஒன்றுக்கு 3லட்சம் டன் தேனிரும்பு உற்பத்திசெய்ய முடியும் என்றும் கணக்கிடப்பட்டிருக்கிறது.

சுமார் 10 ஆயிரம் மக்களுக்கு நேரிடையாகவும், பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு மறைமுகமாகவும் வேலை வாய்ப்பளிக்கும் இத்திட்டம், இரும்பைக் காய்ச்சி உருக்கவும், இயந்திரங்கள் வகுக்கவுமன்றி வேறு பல தொழில்கள் வளரவும் வாய்ப்பாக உள்ளது தமிழர் தம் பெரும்பேறேயாகும்.

அன்பர் திரு. கருப்பையா நெய்வேலிக்குத் தாம் சென்று நேரில் கண்டவற்றையும், அங்கிருக்கும் செய்தி இலாகா அதிகாரியிடம் கேட்டறிந்தவற்றையும் இந்நூலில் தெளிவாக விளக்கியிருக்கிறார், யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற பெருநோக்கோடு இந்நூலை உருவாக்கிய ஆசிரியரின் முயற்சி பாராட்டுக்குரியது.

வெளியீடு :
காங்கிரஸ் நூலகம், சென்னை-6.

—சாமி பழ



## வரப்பெற்றோம்
### (நாட்டுப் பாடல்கள்)

யாழ்ப்பாணப் பிரதேசக் கலை மன்றம். நாட்டுப்பாடல் நடன நாடகக் குழு வெளியீடு.

விலை ரூ. 1. பக்கம் 51.



## சீர்காழி டி. மு. கோர்ட்
## O. P. No. 21/61

மாயூரம் தாலூகா மேலகட்டளை ராமலிங்க முதலியார் மகன் ஷண்முக சுந்தரம் வகையறா
—மனுதார்கள்

by நாகை Dt. Court O P.1/61-ல் நியமிக்கப்பட்ட கார்டியன் அபூர்வத்தம்மாள்—Next friend.

ராமலிங்கம் முதலியார் மகன் R. நடராஜ முதலியார் வகையறா
—எதிர் மனுதார்கள்.

மனுதார்கள் தந்தை இறந்த ராமலிங்க முதலியாரால் Insure செய்யப்பட்ட தொகையில் தங்களுக்குள்ள வீதமாகிய 7-ல் 5-பாகத் தொகையை வசூலித்தடைய வார்சு சர்டிபிகேட் கோரி மனுதார்களின் அடுத்த சினேகிதி கொடுத்த மனு நோட்டீசுக்கும், பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 30—6—61-ல் கெடு. ஆக்ஷேபணையை தெரிவிக்கலாம்.

J. ராமகிருஷ்ணன்.
1/4305/88 அட்வகேட்.

## உங்களுக்குத் தெரியுமா?

சுதந்திரம் பெற்றபிறகு நமது இந்திய அஞ்சல் துறை காந்தி, திலகர், மீரா, கபீர், துளசிதாசர், தாகூர், பிபின்சந்திரபால், ஜகதீஷ் சந்திரபோஸ், கர்வே, டாட்டா, திருவள்ளுவர், பாரதி, மோதிலால் நேரு, விஸ்வேஸ்வரய்யா, சிவாஜி ஆகியோரின் உருவம் பொறித்த தபால் தலைகளை வெளியிட்டிருக்கிறது. ✱

காலையில் பல் துலக்கும்போது பல்லிலிருந்து இரத்தம் வந்தால் வாதுமை ஓட்டைக் கருக்கித் தூள் செய்து கொஞ்சம் உப்பும் கலந்து பல் துலக்கிவர இரத்தம் வருவது நின்றுவிடும். ✱

பம்பாயிலிருந்து வெளிவரும் 'டைம்ஸ் ஆப் இந்தியா' தொடங்கி 123 ஆண்டுகளும், 'ஹிந்து' தொடங்கி 85 ஆண்டுகளும், 'சுதேச மித்திரன்' தொடங்கி 82 ஆண்டுகளும் ஆகின்றன. ✱

1830 ல் பம்பாயிலிருந்து லண்டனுக்குக் கப்பல் மூலம் அனுப்பப்பட்ட தபால்தான் நம் நாட்டிலிருந்து முதன் முதலாக நவீன முறையில் வெளிநாட்டுக்கு அனுப்பப்பட்ட தபாலாகும் ✱

நாம் இப்போது சர்வ சாதாரணமாக வீடுகளில் பயன்படுத்தி வருகிற எவர்சில்வரை 1916 ல் பிரயர்லி என்ற ஆங்கிலேயர்தான் கண்டுபிடித்தார். ✱

முதன்முதலாக வெளியான இங்கிலீஷ் பத்திரிக் 'தி வீக்லி நியூஸ்' என்பது தான். இது 1662ல் முதன்முதலாகப் பிரசுரிக்கப்பட்டது. ✱



| | | | | |
|---|---|---|---|---|
| | Profit as per Last Balance Sheet | | 3,66,691-09 | |
| | Add: Previous year's profit carried down | | 22,071-23 | |
| | Bonus excess appropriated | | 3,021-00 | |
| | | | 3,91,783-32 | |
| | Less: Appropriations: | | | |
| | Charity Fund | 3,667 00 | | |
| | General Reserve | 30,000 00 | | |
| | Income-tax Reserve | 1,50,000 00 | | |
| | Dividends | 1,05,000 00 | | |
| | Special Bonus to H. O. Secretary | 1,000 00 | | |
| | Special Bonus to H. O. Assistant Secretary | 500 00 | | |
| | Legal Adviser | 700 00 | | |
| | Bonus to Staff | 73,000 00 | 3,63,867-00 | |
| | | | 27,916-32 | |
| | Add: Bonus excess appropriated | | 2,138-50 | |
| 3,91,783-32 | Add: Profit for the year Brought from the Profit and Loss Account | | 5,60,939-46 | |
| | | | | 5,90,994-28 |
| Nil | 10. CONTINGENT LIABILITIES ... | | | Nil |
| 3,96,63,041-21 | TOTAL ... | | | 4,34,85,411-95 |

| Rs. nP. | | Rs. nP. |
|---|---|---|
| 2,12,86[illegible]74 37 | (i) Debts considered good in respect of which the Banking company is fully secured | 2,60,91[illegible]37 94 |
| 4,42,[illegible]85 02 | (ii) Debts considered good for which the Banking Company holds no other security than the Debtors' personal Security | 3,81,361 00 |
| Nil | (iii) Debts considered good secured by the personal Liabilities of one or more parties in addition to the personal security of the debtors. | Nil |
| Nil | (iv) Debts considered doubtful or bad not provided for | Nil |
| 8,119 00 | (v) Debts due by the directors or officers of the Banking Company or any of them either severally or Jointly with any other persons | 17,432 31 |
| 23,792 59 | (vi) Debts due by companies or firms in which directors of the Banking Company are interested as directors partners or managing agents or in the case of private companies as members. | 46,270 98 |
| 20,821 13 | (vii) Maximum total amount of advances including temporary advances made at any time during the year to Directors or Managers or officers of the Banking company or any of them either severally or jointly with any other persons. | 37,621 37 |
| 85,751 52 | (viii) Maximum total amount of advances, including temporary advances granted during the year to Companies or firms in which the directors of the Banking Company are interested as Directors, Partners or managing agents, or in the case of private companies as members. | 1,06,632 85 |
| Nil | (ix) Due from Banking Companies | Nil |

யும் ஸ்தாபிக்கப்படும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது வேலூர் பிராஞ்சில் அட்வைசரி கமிட்டி மெம்பராக இருந்த ஸ்ரீ வி. செட்டி ரெங்கனாதம் செட்டியாரும், திருப்பூர் பிராஞ்சில் அட்வைசரி கமிட்டி மெம்பராக இருந்த ஸ்ரீ டி. எஸ். டி. சுப்பிரமணிய செட்டியாரும் காலஞ்சென்றதற்காக வருத்தம் தெரிவித்துக்கொள்கிறோம். ஷெயார்கள் பாங்கின் அபிவிருத்திக்காக செய்த சேவையை பாராட்டுகிறோம்.

குளித்தலை பிராஞ்சில் நீண்டகாலமாக அட்வைசரி கமிட்டி மெம்பராக இருந்த ஸ்ரீ. பி. ஆர். வாசுதேவ செட்டியார், தன் உடல் நிலை காரணமாக ராஜிநாமா செய்ததை அங்கீகரிக்கப்பட்டது. அன்னார் குளித்தலை பிராஞ்சின் அபிவிருத்திக்காக செய்த சேவையை மிகவும் பாராட்டுகிறோம்.

மொத்த லாபம் ரூபாய் 5,90,994-28-ஐ கீழ் கண்

(அடுத்த பக்கம் பார்க்க)

## Profit and Loss Account for the year ended 31 st December 1960.

| Corresponding Figures as on 31—12—59 | EXRENDITURE | | Amount | Corresponding Figures as on 31—12—59 | INCOME: ( Less provisions made during the year for Bad and Doubtful Debts and other usual or necessary provisions ) | Amount |
|---|---|---|---|---|---|---|
| Rs. nP. | | | Rs. nP. | Rs. nP. | | Rs. nP. |
| 14,23,979 93 | 1. Interest paid on Deposits, Borrowings etc. | | 15,15,860 93 | 22,54,930 00 | 1. Interest and discount | 26,72,739 04 |
| 4,14,122 39 | 2. Salaries, & Allowances and Provident Fund: | 5,73,811 63 | | 92,359 88 | 2. Commission exchange and brokerge | 1,16,969 49 |
| | Secretary & Manager | 6,748 75 | | 3,727 80 | 3. Rents | 4,393 88 |
| | | | 5,80,560 38 | 1,754 63 | 4. Net profit on sale of investments, gold and silver, land, premises and other assets ( not credited to reserves or any particular fund or account ) | 23,543 50 |
| 8,160 00 | 3. Directors' and Local Committee Members' Fees and Allowances | | 6,930 00 | | | |
| 50,434 10 | 4. Rent, Taxes, Insurance, Lighting etc. | | 45,705 96 | | | |
| 747 62 | 5. Law charges | | 1,379 61 | | | |
| 31,362 69 | 6. Postage, Telegrams and Stamps | | 38,963 65 | Nil | 5. Net Profit on revaluation of investments, gold and silver, land, premises and other assets (not credited to reserves or any particular fund or account ) | Nil |
| 3,500 00 | 7. Auditor's Fees | | 4,200 00 | | | |
| 14,411 97 | 8. Depreciation on and repairs to the banking company's property | | 16,663 41 | | | |
| 41,294 47 | 9. Stationery, Printing, advertisement etc. | | 39,883 93 | | | |
| Nil | 10. Loss from sale of or dealing with non - Banking assets | | Nil | Nil | 6. Income from non-banking assets and profit from sale of or dealing with such assets | Nil |
| 37,992 23 | 11. Other Expenditure | | 55,216 96 | | | |
| 3,66,691 09 | 12. Balance of Profit | | 5,60,939 46 | 39,924 18 | 7. Other receipts | 48,658 38 |
| 23,92,696 49 | Total Rs. | | 28,66,304 29 | 23,92,696 49 | Total Rs | 28,66,304 29 |

M. G. RAJAGOPAL CHETTIAR
President.

மு. வெ. லக்ஷ்மீநாராயண குப்தா
வைஸ்—பிரசிடெண்டு.

DIRECTORS:

Athi. K. VENKATASUBBARAYAN — M. S. GOVINDARAJULU

Athi. V. SURYANARAYANAN — P. N. BALAGURUMURTHY

K. N. V. MALAYALAM

M. LAKSHMINARAYANAN, B. A., B. L.,
Secretary & Manager.

KARUR,
21—2—1961

21—2—1961

AUDITOR'S REPORT TO SHAREHOLDERS: I have audited the annexed Balance Sheet of the Karur Vysya Bank Limited, Karur as at 31st December, 1960, and also the annexed Profit and Loss Account of the bank for the year ended on that date in which are incorporated the returns of all the branches audited by me. In accordance with the provisions of Section 29 of the Banking Companies Act, 1949, read with the provisions to sub-sections (1) and (2) of section 211 and sub-sections (5) of section 211 and section 277 (5) of the Companies Act, 1956, the Balance Sheet and Profit and Loss Account are not required to be and are not drawn up in accordance with the Sixth Schedule of the Companies Act 1956. The Accounts are therefore drawn up in conformity with forms A & B of the Third Schedule to the Banking Companies Act, 1949. I REPORT THAT (a) I have obtained all the information and explanations which, to the best of my knowledge and belief were necessary for the purpose of my audit and have found them to be satisfactory: (b) The transactions of the bank which have come to my notice, have been within the powers of the Bank; (c) In my opinion, proper books of Account as required by law have been kept by the bank so far as appears from my examination of those books; (d) The Bank's Balance Sheet and Profit and Loss Account dealt with by this report are in agreement with the books of account and the returns; (e) In my opinion, and to the best of my information and according to the explanations given to me, the said accounts give the information required by the Companies Act, 1956, in the manner so required for Banking companies and on such basis the said Balance Sheet gives a true and fair view of the state of the affairs of the bank as at 31st December, 1960, and the Profit and Loss Account gives a true and fair view of the profit for the year ended upon that date,

Karur, 21—2—1961.

N. RAMANUJAM, B. A., F. C. A., Chartered Accountant.

(பாலன்ஸ் ஷீட தொடர்ச்சி)

டவாறு வினியோகிக்கலாமென்று பிரேரேபிக்கிறோம்.

| | |
|---|---|
| தர்ம பண்டு | ரூ. 5,610 00 |
| ஜெனரல் ரிசர்வ் | ரூ. 75,000 00 |
| பங்குதாரர்களுக்கு டிவிடெண்ட் வருஷம் 1-க்கு ரூ. 100-க்கு ரூ. 21 வீதம் | ரூ. 1,31,250 00 |
| இன்கம்டாக்ஸ் ரிசர்வ் | ரூ. 2,00,000 00 |
| சிப்பந்திகளுக்கு போனஸ் | ரூ. 1,30,000 00 |
| லீகல் அட்வைசருக்கு ரெம்யூனரேஷன் | ரூ. 700 00 |
| அடுத்த வருஷத்திற்கு கொண்டு போக | ரூ. 48,434 28 |
| ஆக மொத்தம் | ரூ. 5,90,994 28 |

பாங்கின் அபிவிருத்திக்கு பங்குதாரர்கள், வாடிக்கைகாரர்கள், பொதுஜனங்கள் அளித்த ஆதரவுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறோம். இனியும் அவ்விதமே தொடர்ந்து ஆதரவு அளிக்கக் கோருகிறோம். பாங்கின் சிப்பந்திகளின் உண்மை உழைப்பை பெரிதும் பாராட்டுகிறோம். நமது பிராஞ்சுகளில் இருக்கும் அட்வைசரி கமிட்டி மெம்பர்கள் பாங்கின் அபிவிருத்திக்காக ஊக்கத்துடன் உதவி செய்து வருவதை பெரிதும் பாராட்டுகிறோம்.

மகாசபை மீட்டிங்குக்கு பங்குதாரர்கள் அனைவரும் வந்திருந்து பாலன்ஸ் ஷீட்டையும், லாப நஷ்டக்கணக்கையும், நிர்வாக சபையாரின் ரிப்போர்ட்டையும் அங்கீகரிக்கக் கோருகிறோம்.

By order of the Board,
M. G. RAJAGOPAL CHETTIAR,
President.

கரூர்,
21—2—1961



## வெளியூர் பஸ் நிலைய இடம் தேர்வு

திருச்சி நகரில் வெளியூர் பஸ் நிலையத்துக்கான இடத்தைத் தேர்ந்தெடுக்கச் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அநேக இடங்களைப் பார்வையிட்டதாகவும், வெளியூர் பஸ் நிலையம் ஏற்படுத்த பொலிவார் சாலையிலுள்ள இடத்தை அவர்கள் இறுதியாகத் தேர்ந்தெடுத்ததாகவும் அது பற்றிய அறிக்கையை மாவட்ட கலெக்டர் ஜனாப் குலாம் முகம்மது பாஷாவிடம் சமர்ப்பித்திருப்பதாகவும் தெரிகிறது.

Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji News printers 55, Chintamani Bazaar, Tiruchi-2